# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – கார்த்திகை
2022 – நவம்பர்

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரிக்குச் செல்லும்
இணைப்புப் பாலம் திறப்பு விழா நிகழ்வு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – கார்த்திகை

2022 – நவம்பர் இதழ் – 125

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மடமான் மறிபொற் கலையும் மழுப்பாம்பு ஒருகையில் வீணை

குடமால் வரையதிண் டோளும் குனிசிலைக் கூத்தின் பயில்வும்

இடமால் தழுவிய பாகம் இருநில னேற்ற சுவடும்

தடமார் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்

அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை

*- திருநாவுக்கரசர் தேவாரம்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

பாலங்கள் பலவகைப்படும். அனைத்துப் பாலங்களும் ஏதோ ஒரு வகை இணைப்பை ஏற்படுத்துவதாகவே அமையும். இரு பள்ளங்களை இணைக்கின்ற போக்குவரத்துப் பாலங்கள். இரு உள்ளங்களை இணைக்கின்ற அன்பு உணர்வுப் பாலங்கள். பொருளாதார வேறுபாட்டை இணைக்கின்ற பொருட் பாலங்கள் எனப் பலவகைப்படும். போக்குவரத்துப் பாலங்களிலே சிறு பள்ளங்களை இணைக்கின்ற சிறு பாலங்கள். இரு மலைகளை இணைக்கின்ற மிக நீண்ட பெரிய பாலங்கள், பாலங்களாலே இணைக்க முடியாத தூரத்தை இணைக்கின்ற ரோப் கார்கள் எனப் பலவகைப்படும்.

உணர்வுப் பாலங்களிலே இளம் உள்ளங்களை இணைக்கின்ற காதல் பாலங்கள் தாய், பிள்ளைப் பாசத்தை இணைக்கின்ற பாசப் பாலங்கள். பெரியவர், சிறியவர்கள் இணைக்கின்ற மரியாதைப் பாலங்கள். கணவன் மனைவிக்குள் ஏற்படுகின்ற பாசப் பாலங்கள். வயோதிகக் காலத்தில் மனைவி கணவனின் அன்பை நாடுகின்ற பாசப் பாலங்கள், எனப் பாலங்களிலே காலத்திற்கேற்பப் பல மாறுதல்கள் ஏற்படுவதைக் காண்கிறோம்.

கணவன், மனைவிக்குள்ளே, பெற்றவர்கள் பிள்ளைகளுக்குள்ளே, பாசப் போராட்டங்கள், தியாகப் போராட்டங்கள்; அவற்றையெல்லாம் மாற்றி அமைக்கின்ற பாலங்கள். சகோதரப் பாசத்தினாலே ஏற்படுகின்ற சிரமங்களைத் தாங்குகின்ற வலிகளைத் தாங்குகின்ற உள்ளம். அதற்குள்ளே நடக்கின்ற சிந்தனைப் போராட்டங்கள். அவற்றைச் சமன் செய்து சீரமைக்கின்ற சிந்தனைப் பாலங்கள். ஆசிரியர் மாணவர்களுக்கிடையே ஏற்படுகின்ற குரு பக்தி மரியாதைப் பாலங்கள். கால காலமாக எடுத்து நிற்க வைக்கும் குருபக்தி பாலங்கள்.

பக்தனுக்கும் பரம்பொருளுக்கும் பக்தியுணர்வுப் பாலங்கள். பக்தியினாலே எந்தவிதத் துயரத்தையும், சிரமத்தையும் தாங்க வைக்கும் வலிமை தருகின்ற பக்திப் பாலங்கள். நன்றாகப்

படிக்கக்கூடிய மாணவனுக்கு ஏற்படும் வறுமையைப் பொருளாதார ரீதியாகத் திருத்திக் கொடுக்கும் நன்கொடைப் பாலங்கள் எல்லாவற்றிற்கும் மேலாக எங்கும் எதிலும் யாரிடமும் நல்லதையே எதிர்பார்க்கும் நற்சிந்தனையாளர் நட்புப் பாலம்.

அண்மையில் நம்முடைய நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, ஸ்ரீதில்லை நடராஜர் திருக்கோயில், நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி மற்றும் நாம் ஏற்படுத்துகின்ற பல சிறு காடுகளை இணைக்கின்ற பாலம் திறக்கப்பட்டது. இந்தப் பாலம் காரைக்குடி - மதுரை சாலையில் நம்முடைய மேற்கூறிய கல்லூரிகள், திருக்கோயில்களையும் இணைக்கின்ற பாலமாகும். இப் பாலத்தின் மூலமாக மாணவர்களுக்கும், பக்தர்களுக்கும் ஏறக்குறைய 3 கி.மீ சுற்றி வருவது தவிர்க்கப்படுகிறது. நேரிடையாக, பாலம் வழியாகக் கான்கீரீட் சாலை அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதிவிரைவில் சாலை அமைத்து இணைப்புப் பாலம் பயன்பாட்டிற்கு வந்து விடும். மாணவர்களும் பக்தர்களும் பயன்படுத்திக் கொள்வார்கள்.

இப்படி ஒவ்வொரு பாலத்திலும், பலவகையான சிறு சிறு வேறுபாடுகள் தோன்றுகின்றன. இரு தெருக்களை இணைக்கும் பாலம் ஏற்படுத்தப்பட்டால் போக்குவரத்து எளிதாகிறது; அதிகமாகிறது. அதே போல அனைத்து வகைப் பாலங்களாலும் நன்மையே ஏற்படுகின்றன. எனவே நாம் நமக்கு முடிந்தவரை இணைப்புகளை அமைப்போம். அதிகப்படுத்துவோம்.

எல்லோரும் நன்கு வாழ நாமும் ஒரு கருவியாக உதவிடுவோம். புலமாக அமைவோம் என உறுதி எடுத்துக் கொள்வோம்.

***ஆசீர்வாதங்கள்!***



## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

## (குகன்)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

இறைவனுடைய அருளாலும், வரத்தாலும் இராமபிரானை அடைந்தவர் மூன்று தம்பியர். தர்மமே உருவான பரதன், தொண்டின் மாற்று உருவம் லட்சுமணன், சாஸ்திர ஞானி சத்ருகனன் ஆகிய மூவரும் தவத்தாலும், வரத்தாலும் பிறந்தவர்கள். இந்த மூன்று தம்பியரும் தங்கள் தமையன் இராமபிரானைத் தெய்வமாகக் கருதி வழிபடும் மனநிலை படைத்தவர்கள். தசரதனுக்கு இறைவன் வரமாகத் தந்த நான்கு புதல்வர்கள் போதியவர்களாகத் தெரியவில்லை. பல காலம் மகப்பேறு ஏதுமின்றி தவித்த தசரதன் நான்கு புத்திரர்களோடு சமாதானம் அடையத் தயாராக இல்லை. இதனைக் கம்பருடைய கீழ்க்கண்ட பாடல்

*குகனோடு ஐவரானோம் முன்பு, பின் குன்று சூழ்வான்*
*மகனோடும் அறுவர் ஆனோம், எம்முழை அன்பின் வந்த*
*அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவரானோம்*
*புகல் அரும் கானம் தந்த புதல்வராற் பொலிந்தான் உந்தை*
*(வீட.அடை.143)*

அருமையாக எடுத்துக் காட்டுகிறது. அயோத்தி நகரை விட்டுப் பிரிந்து இலங்கை சென்று திரும்பி அயோத்தி அடைவதற்குள் இராமபிரான் மூன்று தம்பிகளைத் தன்னோடு இணைத்துக் கொண்டு எழுவரானோம் என்று மகிழ்வோடு மேல் மலர்ந்தான் என்று கவிச் சக்கரவர்த்தி கம்பன் குறிப்பிடுகிறான். கானகம் சென்ற இராமபிரான் மூன்று தம்பியரைத் தம்மோடு இணைத்துக் கொண்டான். மூவரையும் இவர் தேடிப் போகவில்லை. அவர்கள்தான் இவரை நாடி வந்தார்கள். அப்படி நாடி வந்த மூவரும் குணத்தாலும், பண்பாலும், அறிவாலும் மூன்று துருவங்களாக இருந்தனர். படிப்பறிவே இல்லாத குகன், சராசரி மனிதனின் குணங்கள் குறைகளுடன் சுக்கிரீவன், அரக்கர் குலத்தவராக இருந்தாலும் வேத வேதாந்தம் கற்று ஞானம் பெற்று இராமபிரானை முழுமுதல் கடவுளான திருமாலின் அவதாரம் என்பதை உணரும் அளவுக்கு ஞானம் படைத்தவன் விபீசணன்.

இவ்வாறு மூவரும் அறிவுத் திறத்திலே வேறுப்பட்டவர்களாக இருந்தாலும் இராமபிரான்பால் செலுத்தும் அன்புத் திறத்திலே ஒற்றுமையாக இருந்தார்கள்.

முதலில் ஏற்றுக் கொள்ளப்பட்ட வேடுவனான குகன் கல்வியறிவும், உலகியல் அறிவும் சிறிதுமில்லாத அடித்தள பாமரனாக இராமரைச் சந்தித்தான். இராமரைச் சந்திக்கும் முன் அவனுடைய உள்ளத்திலே எந்தவிதமான சிந்தனைகளோ குறைபாடோ தோன்றவில்லை. ஆனால் இராமபிரானைப் பார்த்தவுடன் தான் முழுமையாக இராமனிடம் சரணடைந்தான்.

பக்தி, அறிவு இவை இரண்டு வகைப்படும். ஒன்று அன்பு காட்டுவதைக் கொண்டு பிரதி பலனை அடைவது. பக்தி செய்வதைக் கொண்டு கடவுள் அருளைப் பெறுவது. ஆழ்ந்த பக்தியினால் வீடுபேறு அடைவது. இது பக்தியினைச் சாதனமாகக் கொண்டு மேலான ஒரு காரியத்தைச் சாதிப்பதாகும். எனவேதான் பக்திசாதனம் என்று அழைக்கப்படுகிறது. மற்றொரு வகை பிரதிபலனை எதிர்பார்க்காமல் அன்பு செலுத்துவது, பக்தி செலுத்தி அன்பைப் வெறுவது. பக்தி செலுத்துவதையே பாக்கியமாகக் கருதுவது. இதனையே குலசேகர ஆழ்வார் திருப்பதித் தலத்தில் திருக்கோயில் படியாகத் திகழ வேண்டும், திருக்குளத்தில் மீனாகப் பிறக்க வேண்டும் என்று பாடுகிறார். இப்படி இறைவன்பால் பக்தி பெறுவதே பாக்கியமாகக் கருதி, பக்தி செலுத்திய இருவரை நம்முடைய இலக்கியங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அவர்கள் கண்ணப்ப நாயனாரும், குகனும் ஆவர். நாளாறில் கண்இடந்து அப்பவல்ல கண்ணப்பரும் ஆறு கடக்க, சேனைகளைப் பார்க்கப் பரதனை அழைத்து வர உதவிய குகனும் இவ்வாறு பக்திக்காகவே பக்தி செலுத்திய உயர் பக்தர்கள். குகன் இராமபிரானை அகத்தியர் ஆஸ்ரமத்தில் கொண்டு சேர்க்கும் வரை கூடவே இருந்து படகு செலுத்தினான். கூடவே இருந்து உதவினான். எந்தச் சூழ்நிலையிலும், எந்தக் காலத்திலும் மனத்தாலும் இராமபிரானிடமிருந்து ஏதும் வேண்டவில்லை. பெறவும் விரும்பவில்லை. இராமபிரானுடைய திருமுக விலாசத்தைக் காண்பதே

தம்முடைய வாழ்வின் இலட்சியமாகக் கொண்டு கூட இருந்தவன் குகன். எனவேதான் இணைத்துக் கொண்ட மூன்று தம்பிகளில் மூவரில் மிகச் சிறந்தவனாக உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான் குகன்.

சுக்கிரீவன் கிஷ்கிந்தா மலையில் வாழ்கின்ற குரங்குகளின் தலைவனான வாலியின் தம்பியாவான். அவன் இராமனின் நட்பை நாடிவந்து தன் அண்ணன் வாலியைக் கொன்று தன்னை கிஷ்கிந்தாமலையில் அரசனாக்க வேண்டும் என்ற ஆசை கருதியே இராமனின் நட்பை நாடி வந்தான். இராம, இலக்ஷ்மணரை வாலியினுடைய ஏவலர்களாகக் கருத அஞ்சி மலையில் ஒளிந்துகொண்டனர். அவனுடைய அறிவு சார்ந்த அமைச்சரான அனுமனுடைய அறிவு காரணமாக ராமன் சுக்ரீவனைப் பார்க்க ஒப்புக்கொண்டு வந்தான். சுக்கிரீவன் மனைவி உருமையை வாலி கவர்ந்து கொண்டது கேட்டுச் சினம் கொண்டு வாலியை வதைக்கத் திருவுளம் கொண்டான். பிறன்மனை விரும்பியதைப் பெரும் குற்றமாகக் கருதிய இராமன் வாலியை அம்பெய்தி கொன்றான். ஆனால் ஆட்சிக்கு வந்து சில காலத்திற்குள்ளாகவே சுக்ரீவனின் நடத்தையில் மாறுபாடு காணப்பட்டது. படைகளைச் சேகரித்துக் கொண்டு ரிஸ்யமூகரூப மலையில் ராமரை வந்து சந்திப்பதாகக் கொடுத்த வாக்குறுதியை மீறினான். அண்ணன் வாலியின் மனைவி தாரையைக் கவர முயன்றான். இச்செய்திகளை லக்ஷ்மணன் மூலமாக ராமர் தெரிந்து கொண்டு கடும் சீற்றம் கொண்டார். எதை மாபெரும் தவறாகக் கருதி வாலியை மறைந்திருந்து கொன்றாரோ அதே பிறன் மனைவி விரும்பிய சுக்கிரீவன் நடத்தை ராமருக்குக் கடும் சினத்தை உண்டாக்கியது. சுக்கிரீவனை எதிர்த்துப் போரிடத் தயாரானார். நல்லவேளையாக அறிவுசார் அமைச்சர் அனுமன் தன் மன்னவன் செய்கின்ற தவறுகளை மன்னித்து அவனை ஏற்றுக்கொள்ளுமாறு ராமன் திருவடி பணிந்து வேண்டிச் சமாதானம் செய்தான். அதற்குள் செய்தி அறிந்து சுக்கிரீவன் இராமபிரானிடம் தன் பிழைகளை மன்னித்தருள வேண்டித் திருவடி பணிந்து நின்றான். மன்னிக்கவும் பெற்றான். இந்தச் செயல்களிலிருந்து சாதாரண

மனிதனைப் போல் சூழ்நிலைகளுக்கேற்ப மனம் தடுமாறுகின்ற பேதையாகச் சுக்கிரீவன் கவிச் சக்கரவர்த்தி கம்பனால் காட்டப்படுகிறான். அதற்குப் பின் ராம, ராவண யுத்தத்தில் முழுமையாக வலிமையோடு தன் வானரப் படைகளை நடத்தி இராமபிரானுடைய வெற்றிக்குக் காரணமானான். தம்பியாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டான்.

விபிஷணன் இராமனைத் துறந்து ராமனிடம் வந்து பணிந்து நின்று தன்னை அவர் படையில் சேர்த்துக்கொள்ள வேண்டி நின்றான். ராமர் மறுத்துவிட்டார். அறிவுச் செல்வரான அனுமன் தலையிட்டுச் சமாதானம் செய்து விபீஷணனை ராமபிரானுடன் சேர்த்து வைத்தான்.

இராமருடன் சேர்ந்த விபிஷணன், ராவணன் தோற்கடிக்கப்படுவான், போர்க்களத்திலே மாள்வான் என்று திண்ணமாக அறிந்து தான் லங்காபுரிக்கு அரசனாகும் எண்ணத்தோடு ராமரை வந்து அடைந்தான். அதோடு மட்டுமல்லாமல் உள்ளுணர்வால் இராமபிரான் முழுமுதல் கடவுளான திருமாலின் திருஅவதாரம் என்பதை உணர்ந்து இராமபிரானுடைய திருவடி சேர்வதால் வீடுபேறு அடையலாம் என்ற மிகப்பெரிய நோக்கத்தோடு வந்து சேர்ந்தவன் வேதாந்த வித்தகன் விபிஷணன். ராவணனுடைய போர்த் தந்திரங்கள், இந்திரனுடைய மாயஜால தந்திரங்கள், கும்பகர்ணனுடைய மன உறுதி உடல் வலிமை அனைத்தையும் ராம, லட்சுமணன் அறிந்து போரிட உதவியவன். இந்திரஜித்தின் அம்பால் விழுந்த லட்சுமணனை மீண்டு எழ உதவியவன் என்ற பல காரணங்களால் தம்பியாக ஏற்றுக் கொள்ளப்பட்டான்.

எனவே சுக்கிரீவனும், விபிஷணனும் பிரதிபலன் கருதிச் சுயநலத்தோடு இராமனின் அன்பை நாடியவர்கள் என்பது தெளிவாகிறது. குகன் ஒருவனே கள்ளம் கபடம் சிறிதுமில்லாது உள்ளன்புடன் பக்தனாக அடியவனாக வர்ணிக்கப்படுகிறான். எனவே இணைத்துக் கொண்ட தம்பிகள் மூவரில் மிகச் சிறந்தவர் படகோட்டி குகனே எனக் கம்பர் நிலைநாட்டுகிறார்.

*(தொடரும்...)*

## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்ய தேசங்கள்

## 23. திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர்

**(அழ.மெய்யம்மை)**

**(காப்பியக் கவிஞர் நா. மீனவன் அவர்களின் பேத்தி)**

108 திவ்விய தேசங்களுள் இருபத்திமூன்றாவது திவ்ய தேசம், திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தி மூன்றாவது திவ்யதேசமாகும். இத்தலம் மாயவரத்திலிருந்து 21 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. மாயவரம் - கும்பகோணம் சாலையில் வந்து, கோமல் செல்லும் சாலையில் திரும்பிச் சென்றால் மூவலூரையடுத்துத் திருஅழுந்தூர் இருக்கின்றது.

கோகுலத்தில் கோபாலர்களுடன் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த கண்ணன், ஒருநாள் பசுமந்தையை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு யமுனை நதிக்குச் சென்றிருந்தான். அப்பசுமந்தையை பிரம்மா தேரழுந்தூருக்கு ஓட்டி வந்து விட்டார். இச்செயல் அறிந்த மாயக்கண்ணன், அது போன்ற பசுமந்தையை அவ்விடத்திலேயே படைத்தான். தன் தவறை உணர்ந்த பிரம்மா, கண்ணன் முன் தோன்றி, தேரழுந்தூரில் கோயில் கொள்ள வேண்டுமென்று விண்ணப்பித்தார். அதை ஏற்ற கண்ணன், ஆ எனும் பசுக்களை மருவி, ஆநிரையை மேய்க்கும் அமரர் கோமானாக, ஆமருவியப்பனாக வந்தமர்ந்தான்.

இங்குள்ள

மூலவர் - தேவாதிராஜன்

தாயார் - செங்கமலவல்லி

உற்சவர் - ஆமருவியப்பன்

விமானம் - கருடவிமானம்

தீர்த்தம் - தர்சனபுஷ்கரணி, காவேரி

கோலம் - கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

தேவாதிராஜன் பதின்மூன்று அடி உயரத்தில், சாளக்கிராமத்தில் ஜொலிக்கின்றார். வடமொழியில் இப்பெருமானுக்குக் கோசகன் என்னும் பெயருண்டு. கோசகன் என்பதன் தமிழாக்கமே

ஆமருவியப்பன் ஆகும். உற்சவரான ஆமருவியப்பனுக்கு முன்புறம் கன்றும் பின்புறம் பசுவும் அமைந்துள்ள பேரழகை எழுத்தில் அடக்க இயலாது. இங்குள்ள இராஜகோபுரம் மூன்று நிலைகளை உடையது. மார்க்கண்டேயரும் இத்தலத்துப் பெருமாளைச் சேவித்து மோட்சம் பெற்றார்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா. மீனவனார் திருவழுந்தூர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. ஆமருவியப்பன் என்று இத்தலத்தின் பெருமாள் அழைக்கப்படுவதற்கு மற்றொரு கதையும் உண்டு. பெருமாளும் சிவனும் சொக்கட்டான் ஆடிக்கொண்டு இருந்தார்கள். ஆட்டத்தில், யார் காயை உருட்ட வேண்டும் என்பதில் ஒரு சின்னக்குழப்பம் வந்துவிட்டது. பார்வதிதேவி தான், ஆட்டத்தைப் பார்த்துத் தீர்ப்புக் கூறும் நடுவர். பெண்களுக்கு என்னதான் இருந்தாலும், பிறந்த வீட்டுப் பாசம் சட்டென்று போய்விடுவதில்லை. அண்ணனாகிய பெருமாளுக்குச் சாதகமாகத் தீர்ப்பு சொல்லிவிட்டார். அவ்வளவுதான்! சிவனுக்குக் கோபம் வந்துவிட்டது. பார்வதிதேவியைப் பசுவாக மாறுமாறு சபித்துவிட்டார். பசுவாக மாறிப் பூலோகம் வந்த பார்வதி தேவியைத் தனியே விட மனதில்லாமல், சரஸ்வதி தேவியும், லஷ்மி தேவியும் தாங்களாகவே பசு ரூபம் எடுத்து, மூன்று பேருமாக பூமிக்கு வந்து விடுகிறார்கள். அவர்களை மேய்ப்பதற்காக, பெருமாளே ஆமருவியப்பனாக வந்து சேர்ந்தார். ஆமருவியப்பன் அழகோ கொள்ளை அழகு! இவர்கள் சொக்கட்டான் ஆடிய மண்டபம், இக்கோயிலுக்கு நேரெதிரே உள்ள சிவன் கோவிலான வேதபுரீஸ்வரர் கோவிலில் உள்ளது.

இத்தலத்தில், பூக்களைச் சுற்றி வந்து தேன் குடித்த மயக்கத்தில் வண்டினங்கள் பூபாள ராகங்களை இசைக்கின்றன. இங்கு உறைந்திருக்கும் தெய்வமான, பசுக்களைச் சுற்றி வந்து மேய்த்துக் கொண்டிருக்கும் ஆமருவியப்பன் எனும் கோவிந்தனின் பாதங்களை நாடிச் சேமங்களைப் பெறுவதற்காக, அக்கோமானைச் சேர்ந்து வணங்கச் சொல்லும் முதல் பாடல்:

*பூமருவும் வண்டினங்கள் பூபாளம் பாடிவர*
*ஆமருவி அப்பனாம் அரங்கன் எனும்தெய்வம்*
*கோமான்நல் திருவழுந்தூர் கோவிந்தன் கழல்நாடிச்*
*சேமங்கள் நாம்பெறவே சேர்ந்திங்கே வணங்குமினே.*

2. தனது தவவலிமையால் விமானத்துடன் ஆகாசத்தில் சஞ்சரிக்கும் திறன் பெற்றவன் உபரிசரவசு என்னும் அரசன். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர்ந்த ஒரு விவாதத்தில், ஒருதலைப் பட்சமாக அம்மன்னன் தீர்ப்பளிக்க நேர்ந்தது. இதனால் முனிவர்கள் கோபமுற்று, இவனுடைய தேரின் நிழல், பூமியில் எங்குபட்டாலும், அவ்விடம் கருகி விடும் என்று சாபமிட்டனர்.

கண்ணன், இத்தலத்தில் முன் கூறியது போல், அம்மூன்று பசுக்களையும் மேய்த்துக் கொண்டிருந்த போது, உபரிசரவசு தேரில் வலம் வருகிறார். தேரின் நிழல் பசுக்களின் மீது பட்டதும், அப்பசுக்கள் வேதனை தாங்காமல் அலறின. சினமடைந்த கண்ணன், தரையில் விழுந்த தேரின் நிழலைத் தன் காலால் ஓங்கி அழுத்த, தேர் அப்படியே பூமியில் அழுந்தி நின்றுவிட்டது.

இவ்வாறாக, உபரிசரவசு மன்னரின் தேர் அழுந்தின இடம்தான் இந்தத் தேரழுந்தூர். பசுக்களுக்கு ஆபத்து ஏற்படுத்திய அரசனுக்கு கோஹத்தி தோஷம் உண்டாயிற்று. மன்னன் சுவாமிக்கு ஆயிரம் குடங்கள் வெண்ணை சமர்ப்பித்து முறையிட்டு, பிரார்த்தனை செய்து, கோஹத்தி சாபம் நீங்கப் பெற்றான். இந்நிகழ்வை ஒட்டி இப்போது வருடத்தில் இரண்டு நாட்கள், தை அமாவாசை தினத்திலும், புரட்டாசி கடைசி சனிக்கிழமையும் மூலவருக்கு ஆயிரம் குடம் வெண்ணை உற்சவம் நடக்கின்றது.

அத்தகைய உயர்ந்த பதியில் வாழ்கின்ற திருமாலின் சேவடிகளைப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல்:

*தேரோடு வான்மிசையில் திரிகின்ற திறனுடையான்*
*தேர்விழவே முனிவரெலாம் திரண்டங்கே சாபமிடத்*
*தேரழுந்திப் போனமையால் தேரழுந்தூர் என்றான*
*சீர்பதிவாழ் திருமாலின் சேவடிகள் போற்றுமினே.*

3. திருமங்கையாழ்வார் இத்தலத்தை 45 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். அதுவும் தாயாரையும் சேர்த்து மங்களாசாசனம் செய்திருக்கிறார். திவ்யதேசக் கோயில்களில் தாயாரையும் சேர்த்துப் பாடியுள்ளது இத்திருதலத்தில் மட்டும்தான். நம்முடைய அஞ்ஞானத்தை வேரறுக்கும் சக்கரத்தை உடையவன், தேனைப் பருகிய வண்டினங்கள் ஒன்றுசேர்ந்து இசைபாடும் இனிய இப்பகுதியில் தென்னை மரங்கள் சூழ்ந்த சோலைகள் நிறைந்த தேரழுந்தூரில், செங்கமலவல்லித் தாயாருடன் சேர்ந்திருந்து அருள்பாலிக்கின்றான். அவனருளைப் பெறுவதற்காக அவனை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல்:

***நங்கள்மல வேரறுப்பான் நயந்துறையும் சக்கரத்தான்***
***செங்கமல வல்லியுடன் சேர்ந்தருளும் இனியபதி***
***கொங்குதேர் வண்டினங்கள் கூடியே பண்மிழற்றும்***
***தெங்குசூழ் சோலைவளர் தேரழுந்தூர் வணங்குதுமே.***

4. கவிச்சக்கரவர்த்தி கம்பன் பிறந்தது இந்தத் தேரழுந்தூராகும். இங்கு, கம்பர் மேடு என்ற இடமே கம்பர் வாழ்ந்த இடமாகும். கம்பருக்கும், அவர் மனைவிக்கும் இக்கோவிலில் சிலைகள் உள்ளன. இப்போது அழகான கம்பன் மண்டபமும் உள்ளது.

அகத்திய மாமுனிவர் ஒரு சமயம், காவிரித் தாயை அணுகி, தன்னை மணந்து கொள்ள விண்ணப்பிக்க, காவிரி மறுக்க, இதனால் கோபமுற்ற அகத்தியர், காவிரியைக் குடத்திலடைத்தார். தரையில் இருந்த அக்குடத்தை, காகம் சாய்க்க, காவிரி வழிந்தோடியது. இதனால், மீண்டும் சினமுற்ற முனிவர், காவிரியால் வளம் பெறும் பகுதியில் உள்ளோர் அனைவரும் துன்புற்று வறுமையுறட்டும் என்று சாபமிட்டார். இச்சாபத்தைப் போக்குவதற்காக, காவிரித்தாய் இத்தலத்தில் தேவாதிராஜனைக் குறித்துத் தவமிருந்து, தனது சாபத்தைப் போக்கிக் கொண்டாள். இப்பெருமானை நோக்கித் தவமிருந்த நிலையில் காவிரித் தாயாரும் இச்சந்நிதியில் இடம் பெற்றுள்ளாள்.

கர்ப்பக்கிரகத்தில் பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவியோடு இல்லாமல், கருடன் பிரகலாதனோடு உள்ளார்.

தேவேந்திரன் ஒருசமயம் கருடனை அழைத்து, ஒரு வைர முடியினையும், ஒரு விமானத்தையும் தந்து, அவைகள் எந்தப் பெருமானுக்கு உகந்தவைகளோ, அவரவரிடம் சேர்ப்பிக்குமாறு வேண்டிக் கொண்டார். கருடனோ, மைசூர், திருநாராயணபுரத்தில் உள்ள செல்லப் பிள்ளை பெருமாளுக்கு வைர முடியினையும், இந்த தேவாதிராஜனுக்கு விமானத்தையும் அளித்தார். அதனால், இத்தலத்தின் விமானம் கருட விமானம் ஆயிற்று. மேலும், இப்பெருமான் கருடனைத் தன் பக்கத்திலேயே அமர்த்திக் கொண்டார். மற்ற தலங்களில் கருடாழ்வார் சுவாமிக்கு எதிரே இருப்பார்.

தேவாதிராஜன், கருடனை மட்டுமல்ல, பிரகலாதனையும் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டுள்ளார். பிரகலாதன், நரசிம்ம அவதாரத்தைக் கண்டு பயந்து, பெருமானின் சாந்த சொரூபத்தைக் காட்ட வேண்டுமென்று வேண்டினார். சினம் அடங்கப்பட்ட சிங்கமாகப் பெருமாள் காட்சியருளினார். இருப்பினும், பிரகலாதனின்அச்சம் குறையாததால், ஆமருவியப்பனாக, பிரகலாதனுக்குக் காட்சி தந்தார் எம்பெருமான்.

இவ்வாறு கம்பன் பிறந்த ஊர், காவிரி தங்கும் ஊர், கும்பமுனி சாபம் குலைந்த ஊர் என்று எல்லாம் புகழப்படுகின்ற தேரழுந்தூரில் வீற்றிருக்கும் எம்பெருமானை, இதுவரை நினைக்காமல் இருந்து விட்டாலும் பரவாயில்லை, இன்று முதல் நினையுங்கள் எனக் கூறும் நான்காம் பாடல் :

***கம்பன்எனும் புலமைக் கவியரசன் பிறந்தஊர்***
***இம்பர்புகழ் காவிரியாள் எழிற்புனலும் சேர்ந்தஊர்***
***கும்பமுனி கருடன்முதல் கும்பிட்டுச் சிறந்த ஊர்***
***எம்பெருமான் தேரழுந்தூர் இன்றுமுதல் நினையுமினே.***

5. இம்மாயக் கண்ணன், குறும்புகள் செய்வதில் தீராத விளையாட்டுப் பிள்ளையாக இருந்ததால், யசோதை கிருஷ்ணரின் இடுப்பிலே ஒரு கயிற்றைக் கட்டி, ஓர் உரலிலே அக்கயிற்றைப் பிணைத்துவிட்டு, தனது வேலைகளில் ஈடுபட்டாள். குழந்தை கண்ணன் அந்த உரலை இழுத்துக் கொண்டு. அங்கேயிருந்த இரட்டை மருதமரத்தின் இடையே

உரலோடு புகுந்து, மரத்தைப் பிளந்தான். இவ்வாறு மருதமரத்தின் இடையில் சென்ற மணிவயிற்றுத் தாம்புடையவனை, ஆழ்வார்களின் பாடல்களில் மயங்கியவனை, பூமெத்தை போன்ற பாம்புப் படுக்கையில் துயிலும் பிரானை, ஆமருவியப்பனைத் தினமும் போற்றச் சொல்லும் ஐந்தாம் பாடல்:

*மாமருதின் இடைசென்ற மணிவயிற்றுத் தாம்புடையான்*
*பாமெத்த ஆழ்வார்கள் பாடல்களில் மயங்கியவன்*
*பூமெத்தை போல்அரவப் பொற்பாயல் துயின்றபிரான்*
*ஆமருவி அப்பன்தான் அனுதினமும் போற்றுமினே.*

திருவுக்கும் திருவாகிய செல்வா என்றுதான் திருமங்கையாழ்வார் இப்பெருமானைச் செல்லமாக அழைப்பார். துணிக்கொடிகளும், தேர் செல்லும்போது ஏற்படும் தூசியும், மங்கையர் தம் கூந்தலில் காட்டிய அகிற்புகையும் ஒன்று சேர்ந்து, மழை மேகத்தை நினைவுபடுத்தும் அழகிய வீதிகளைக் கொண்ட திருவழுந்தூர், பகலுக்கும் இரவுக்கும் தலைவனாய், பூலோகமும் விண்ணுலகும், தானே ஆகி, நிகரில்லாத சூரிய சந்திரர்களும் இருளுமாகி நின்ற ஆமருவியப்பன் நின்றருளும் திருத்தலம் ஆகும் என இத்தலத்தைப் புகழ்ந்து பாடும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

*பகலும் இரவும் தானேயாய்ப் பாரும் விண்ணும் தானேயாய்*
*நிகரில் சுடராய் இருளாகி நின்றார் நின்ற ஊர்போலும்*
*துகிலின் கொடியும் தேர்த்துகளும் துன்னிமாதர் கூந்தல்வாய்*
*அகிலின் புகையால் முகிலேய்க்கும் அணியார் வீதி அழுந்தூரே.*

*(தொடரும்...)*



## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 18

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி, புதுச்சேரி)

மதுரைக்கு அருகில் உள்ளது திருமோகூர் திவ்யதேசமாகும். நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்த இத்தலத்தில் பரந்தாமன் காளமேகப் பெருமாள் என்ற பெயருடன் கிழக்கு நோக்கிய சந்நிதியாய் வலது கரம் வரம் அளிக்கும் குறிப்பைக் காட்ட இடக்கரத்தில் கதாயுதத்துடன் நின்ற கோலத்தில் சேவை சாதிப்பதைக் காப்பியக் கவிஞர் ஒவ்வொன்றாகக் கூற உள்வாங்கிய சேவாதிகள் மோகூர் வல்லி நாச்சியாருடன் மோகூர் ஆப்தனை வணங்குகிறார்கள்.

முதலில் மோகூர் என்ற ஊரின் பெயருக்கு மீனவர் விளக்கம் கூறுகையில், பெரிய பிராட்டியார் தனக்குத்தானே தன்பேரழகால் செருக்கடைந்தாராம்! அந்த அற்ப எண்ணத்தை அகற்ற, பெண்ணுக்குப் பெண்ணாய் மோகினி அவதாரம் எடுத்த எம்பெருமான் பிராட்டியின் விஞ்சிய அழகுடன் நின்றபோது செருக்கடங்கிற்றாம். பெண்ணே பெண்ணை மோகித்ததால் மோகூர் எனப்பட்டதாம் - என்றார் மீனவர்.

பிரம்மாவும் இந்திரனும் இத்தலத்தில், தவமிருந்துபேறு பெற்றனராம். துவாபரயுகத்தில் புலத்தியர் என்னும் முனிவர் இங்குத் தவம் இயற்றிப் பேறு பெற்றாராம்.

இவற்றையெல்லாம் கேட்டவர்கள் - தம் கருமோகம் (பிறப்பு) தவிர்ப்பான் என எண்ணி வணங்கியவாறே சிவகங்கை மாவட்டத் திருப்பத்தூர் அருகே உள்ள திருக்கோட்டியூருக்கு மீனவர் வழிகாட்டச் சென்று அங்குள்ள சௌமிய நாராயணனாம் உரகமெல்லணையில் (பாம்புப் படுக்கை) பரந்தாமனைக் கண் குளிரக் கண்டு தரிசிக்கின்றனர்.

திருக்கு ஓட்டியூர் எனப் பாவங்களை ஓட்டும் ஊர் என்ற விளக்கத்தைக் கேட்டதும் மீனவர் தொடர்ந்து சேவாதிகளுக்குக் கோட்டியூர் நம்பிகள் பற்றிய விருத்தாந்தத்தை விளக்கமாகக் கூறுகிறார்.

அதாவது வைணவத்தில் திருவரங்கத்திற்குச் சமமான புகழுடைய திருத்தலம் இத்திருக்கோட்டியூராம், ஏனெனில் இராமானுசர் திருவரங்கத்திலிருந்து 17 முறை இங்கு வந்து நம்பிகள் என்பாரிடம் உபதேசம் கேட்க வந்தபோதெல்லாம் உபதேசம் கிட்டாத நிலையில் 18ஆம் முறையில் வந்தபோது கிட்டியதாம், அந்த உபதேசந்தான் ஓம் நாராயணத் திருமந்திரமாம்.

முறைப்படி நம்பிகள் இராமானுசருக்கு, உபதேசம் கூறியதும் அதை அனுசரிக்கும் முறையைக் கூறினார். இம்மந்திரத்தை எவருக்கும் தெரியப்படுத்தக் கூடாது என்றும் கூறினால் நரகம் சம்பவிக்கும் என்றும் நம்பிகள் எச்சரித்தாலும் இராமானுசர் திருக்கோட்டியூர் மதிலேறி யாவருக்குமாக அம்மந்திரத்தைக் கூறி ஸ்ரீமந் நாராயணனின் திருவருளுக்குப் பாத்திரமானார் - என மீனவர் வைணவ விருத்தாந்தத்தை விவரமாகக் கூறினார். இதனைத் திருக்கோட்டியூர் பற்றிய பாமாலையில் "நானிலமே வீடு பெற எம்பெருமான் (இராமானுசர்) நம்பிகள் கூறு மந்திரத்தை உரைத்தார்", என்றார்.

இத்திருக்கோட்டியூரில் பரந்தாமனுக்கு மாதவன் என்ற பெயரும் உண்டு. நின்றும் இருந்தும் கிடந்துமான மூன்று திருக்கோலத்தில் மாதவன் சேவை சாதிக்கின்றான். மேலும் மீனவனார் இப்பாமாலையில் இரணியனின் கதை முடித்ததை மூன்று பாடல்களில் திரும்பத் திரும்பக் கூறுகிறார். சேவாதிகள் இதுபற்றிக் கேட்டபோது மீனவனார், இத்திருக்கோட்டியூர்க் கோயில் சிற்பங்களுள் அதி அற்புதமாக இரணியன் வதையைச் சிற்பி உயிரோட்டமாய் வடித்திருப்பதைக் காட்டிய போது மெய்சிலிர்த்த சேவாதிகள் மீனவரோடு திருப்புல்லாணி எனும் திவ்யதேசம் சென்றடைந்தனர்.

அதாவது இத்திருக்கோட்டியூரில்தான் ஆதிப்பரம்பொருளின் அருளாணையுடன் அதர்மத்தை அழிக்க ஞானங்கள் எல்லாம் ஒன்று கூடிக் கூட்டமாய் (கோஷ்டியாய்)த்திட்டமிட்டபடியால் திருக்கோட்டியூர் எனப் பெயரமைந்த தத்துவத்தை அசை போட்டவாறு என்பது கருத்து. இதனை மீனவர் "எல்லாமே நான் என்ற இரணியனின் கதைமுடிக்க மாலும் தேவர்களும் மூர்த்திகளும் நலங்காணக் கூடுபதி செல்வத் திருக்கோட்டியூர்" என்றதால் உணர்ந்து தெளிந்தவாறு திருப்புல்லணை

என்னும் தர்ப்பசயனப் பரந்தாமனைச் சேவாதிகள் சேவிக்கின்றனர்.

இராமநாதபுரத்திற்கு அருகில் சக்கரவர்த்தித் திருமகனாய்க் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் மூலவர் புல்லணையில் கிடந்த கோலமாய்க் காட்சி தந்தாலும் இராவணனின் வெற்றிக்குப் பிறகு தெய்வச்சிலை செகந்நாதனாய் நின்ற திருக்கோல உற்சவ மூர்த்தியின் சேவையைச் சேவாதிகள் தரிசிக்கின்றனர்.

இத்திருப்புல்லாணியின் பிரலாப வரலாறு அதிஅற்புதமானதாக மீனவரால் பாமாலையில் பாடப்பட்டுள்ளது. ஐந்து பாடல்களும் ஐந்தமிழ் இன்பம் தருகின்றன.

சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனைக் கொல்ல வானரச் சேனையுடன் சேதுக்கரை அடைந்து கடலைக்கடக்க உபாயம் சொல்ல வேண்டுமாய்க் கடல் அரசனாம் வருணனைக் கேட்க 7 நாள் புல்லில் தவமிருந்த பரந்தாமன் என்பதாக முதல் பாடல் கூறுகிறது.

"காகுத்தன் அணைகட்ட வருணன்தன் அருள்வேண்டி உலர் தருப்பைப் புல்லணையில் உறைந்த இடம்" - என்பது மீனவர் வாக்கு. அடுத்து நல்லார் பலர் கூடி நாளும் பணிந்தேத்திப் புல்லாணி வந்து சேவித்ததாகப் பாடுகிறார். இதற்கான வரலாறாகக் கண்ணுவர், காலவர், புல்லவர் என்னும் மூன்று முனிவர்கள் தவமியற்ற இடம் கேட்ட போது வைகுந்தத்திலிருந்து இங்கு வந்த பரந்தாமன் ஓரறிவு எனப்படும் புல் என்பதன் சாயலால் அரசமரமாய் நின்ற இடமே புல்லாணியாம் என்றார் மீனவர்.

திரேதா யுகத்தில் இராமனின் தந்தை தசரதன் பிள்ளை வரம் வேண்டிவந்த தொன்மைமிக்கது இப்புல்லாணியாம் என "பிள்ளை வரம் வேண்டிப் பெருந்தேவன் தயரதன் தவமிருந்த உயர்வான புல்லாணி" என்று மூன்றாவது பாடலில் கூறினார்.

வெற்றி கொண்ட இராமன் இலங்கையிலிருந்து திரும்புகையில் பக்தர்கள் வேண்டப் பட்டாபிடேக ஒத்திகையாய்க் காட்சி தந்ததாக மீனவர், "வேதம் பொருளான வித்தகனாம் கோவிந்தன் அழகு பத்மாசனியான மாதரசி தன்னுடைய மனைவியெனக் கொண்டான்" என இப்புல்லாணியின் பிரலாபத்தை நான்காம் பாடலில் கூறினார்.

ஐந்தாம் பாடலின் கருத்து அகப்பொருட்சுவையுடையது. சேதுபதி மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்ட இப்புல்லாணித் தலமானது திருமங்கை மன்னரால் மங்களாசாசனம் செய்யப்பட்டதாம். அதில்

*வில்லால் இலங்கை மலங்கச் சரம் துரந்து*
*வல்லாளன் பின்போன நெஞ்சம் வருமளவும்*
*எல்லாரும் என்தன்னை ஏசிடினும் பேசிடினும்*
*புல்லாணி எம்பெருமான்பொய் கேட்டிருந்தேனே!*

எனப் பாடிய பாடல் தன்னிலை துறந்த பெண்மை நிலையாகும் என்கிறார் மீனவர். அதனால்தான்,

*திருமங்கை ஆழ்வானின் தெய்வத் தமிழ்ப்பாடல்*
*ஒருமாலை எனக்கொண்ட உத்தமனைப் புல்லாணித்*
*திருமாலைக் கையாரக் கும்பிடுமின்*

எனச் சேவாதிகளுக்குக் கூறினார். அதாவது இராமன் பின்னாக நெஞ்சம் போய்விட்டதாம், அது திரும்ப வரும்வரை யார் எது கூறினும் காத்திருப்பேன் இப்புல்லாணியில் என்று திருமங்கை மன்னனாம் நாயகி கூறுவதான மங்களாசாசனத்தை மீனவர் மேதாவிலாசமாக மீண்டும் எடுத்து மொழிந்த சிறப்பால் புல்லாணியை மறக்க முடியாதவர்களாகச் சேவாதிகள் திருமெய்யம் என்னும் பாண்டிநாட்டின் பதினெட்டாம் வைணவத் தலத்தைச் சேவிக்கப் புறப்பட்டனர்.

மெய்யப்பன் என்னும் சத்தியமூர்த்தி திருநாமத்துடன் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் பரந்தாமன் பரம்பொருள் தானே சத்தியத்தின் மெய்வடிவமாய்க் காட்சி தருவதால் இத்தலம் திருமெய்யம் எனப்பட்டது. உய்யவந்த நாச்சியார் உடனிருக்கச் சத்தியத்தின் பலாபலனை உலகிற்குக் காட்டத் தாமே நீதிபதியாக வாய்மையின் இலக்கணக்கர்த்தாவாகத் தத்துவம் காட்டும் மெய்யனாக இருப்பதைச் சேவாதிகள் மீனவனாரின் விளக்கத்தால் கண்டு வழிபடுகிறார்கள்.

திருமெய்யம் என்னுமொரு மலை கொண்ட பெருமான் எனப் பாமாலையில் கூறியபடி இத்தலம் சத்தியகிரி என்ற பெயர் பெற்றதாகும்.

தெங்கினது பாளை மணம் பரப்பும் படர் சோலைத் திருமெய்யம் என இத்தலத்தின் சுற்றுச்சூழலை மீனவர் பாராட்டுகிறார்.

பைவண்ணநல்அரவப் பாயலான் என இத்தலத்துப் பரந்தாமரைக் கூறக் காரணம் ஒன்றுள்ளதாக மீனவர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

விடத்தால் உலகம் தன்னைத் தீய குணத்தோடு பார்க்கும் பாவத்திலிருந்து விடுபட்டுச் சத்துவ குணத்துடன் இருக்கும் அருளைத் தர ஆதி சேடப் பாம்பு வேண்டுதலின்படிப் பரந்தாமன் அனுக்கிரகம் செய்தாராம், எப்படி எனில்,

பரந்தாமனின் கட்டளைப்படி ஆதிசேடன் கடுந்தவம் இயற்றும்போது ஆயிரம் தலைகளுடன் பலமைல் நீளமுடைய உடம்பை ஐந்து தலைகளாய்ச் சுருக்கிக் கொண்டு பனைமர அளவு உயரத்தில் உடம்பை எடுத்துக்கொண்டு பூமிக்குள்ளே துளைத்துக் கொண்டு புகுந்து, இந்த இடத்தில் வெளிப்பட்டதாம்.

இதனை மெச்சிய பரந்தாமன், கல்வி வித்தைக்குத் தேவதையான அயக்கிரீவ ரூபமாய்த் தோன்றி ஆதி சேடனைப் படுக்கையாய்ப் பள்ளி கொண்டு அனுக்கரித்தானாம் என்ற மீனவனாரின் கதாகாலட்சேபம் போன்றதைக் கேட்டதும் ப்ரவசப்பட்ட மெய்யன்பர்களாம் சேவாதிகள், திருவுடைய திருமெய்ய மலையுடையான், எத்திக்கும் இறைவன் இவன் என்றே போற்றி வணங்கினார்கள்.

மேலும் திருமெய்யமலை என மீனவர் மூன்றாம் பாடலில் கூறுவதற்கு ஏதேனும் வரலாறுண்டா எனச் சேவாதிகள் கேட்க, அவரும் சத்தியகிரி என்பதன் பெயர்க் காரணத்தைப் புராணத்தின் வழிக் கீழ்க்கண்டவாறு கூறினார்கள்.

இமயத்தின் வடபுரத்தில் சித்திரசிலை என்ற பாறையின் கீழ் வளர்ந்த பத்ரவடம் என்னும் ஓர் ஆலமரத்தின் கீழ் சத்தியதவர் என்பார் தவமிருந்தார். தவத்தை மெச்சிப் பரந்தாமன் வெளிப்பட்டு வேண்டு வரம் யாது எனக் கேட்கத் தவசியும் தாம் வேண்டும் இடங்களில் எல்லாம் தோன்ற வேண்டும் எனக் கேட்டாராம். அதுபடி அவர் இமயத்தை விட்டுப் பிரிந்தபோது - தாம் தவம் செய்த சித்திர சிலை என்னும் பாறை புஷ்பபத்திரை என்னும் நதி, பத்ரவடம் என்னும் ஆலமரம் என்ற மூன்றுடன் காட்சிதர வேண்டியபடி

இத்திருமெய்யத்தில்தான் காட்சி கிடைத்ததால் சத்தியம் தவறாதபடி நடந்த வைபவத்தால் சத்தியகிரி யானதாக மீனவர் சிலாகித்தார்.

கேட்ட சேவாதிகள் மனம் சிலிர்த்து, மீனவர் பாடியவாறு ஆரார் வரினும் அவரவர்க்கருளும் திருமெய்யத்தை மெய்யாரத் தரையில் விழுந்து வணங்கினார்கள். இதுபோல் தினமும் நெஞ்சார ×××வேளை தவறாமல் விழுந்து தொழுதிடுமின்××× என ஐந்தாம் பாடலில் கட்டளைபோல் பாடிச் சாசனம் செய்தார்.

இவ்வாறு பாண்டிப் பதினெட்டை வணங்கியதும் வடநாட்டுத் திருப்பதிகளை வணங்க ஆர்வப்பட்ட சேவாதிகளிடம் மீனவர் ஒரு விளக்கம் கூறுகிறார்.

தென்னாட்டுத் திருப்பதிகள் போல் வடநாட்டுக் திருப்பதிகள் மாடமாளிகையுடனோ, சுற்றுச் சுவர்களுடனோ, தடாகங்களும் மரங்களும் சூழ்ந்த சோலைகளுடனோ இருக்காது என்றும் பெரும்பாலும் தென்னிந்தியாவை விடப்பிற நாட்டுப் படைஎடுப்பால் பாதித்த நிலையில் பெரும் சிதைவுகளுக்கு உட்பட்டதாகவே கோயில் உள்ளன என்றதோடு திருஉருவங்களும் வித்தியாச வடிவமாகவே இருக்கும் என்றும் கூறினார். இருப்பினும் புண்ணிய நதிக்கரைகளில் தலங்கள் அமைந்த சிறப்பு சிந்தனைக்குரியதாகும் என்று தீர்த்தப் பெருமையின் புகழைக் கூறினார். மொத்தம் 12 திருப்பதிகள் வடநாட்டுத் தலங்களாக ஒரு முன்னுரையைத் தந்த மீனவனார் முதலில் ஏகபத்தினி விரதனான இராமனது திருஅயோத்திக்கு நம்மையெல்லாம் இட்டுச் செல்லச் சீதாபிராட்டியோடு இராமபிரானைச் சேவிப்பதை அடுத்து உணர்வோமாக !



# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## பழமை

(பழைய நட்பு)

**1. பழமை எனப்படுவது யாதுஎனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

பழமை எனப்படுவது - பழைய நட்பினை உடையவர் எனப்படுவது; யாதுஎனின் - யாது என்றால்; யாதும் - எதையும்; கிழமையை - உரிமையை; கீழ்ந்திடா நட்பு - சிதைக்காத நட்பாகும்.

பழைய நட்பினை உடையவர் எனப்படுவது எந்த நிலையிலும் உரிமையைச் சிதைக்காத நட்பாகும்.

நீண்டகால நட்பு உரிமையைச் சிதைக்கக் கூடாது.

**2. நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்று அதற்கு**
**உப்பாதல் சான்றோர் கடன்.**

நட்பிற்கு உறுப்பு - நட்புக் கொள்வதற்கான உறுப்பு; கெழுதகைமை - உரிமையும் உரிமையோடு செய்தலும் ஆகும்; மற்று அதற்கு - அதற்கு; உப்பாதல் - இனிமை யாகுதல்; சான்றோர் கடன் - சான்றோர்களின் (நண்பர்களின்) கடமை ஆகும்.

நட்புக் கொள்வதற்கான உறுப்பு உரிமையும் உரிமையோடு செய்தலும் ஆகும். அந்த நட்புக்கு இனிமையாகுதல் சார்ந்த நண்பர்களின் கடமையாகும்.

நட்புக்கு உறுப்பு உரிமை; உரிமைக்கு இனிமை சேர்த்தல் நண்பரின் கடமை.

மற்று - வினைமாற்றுச் சொல் ;

உப்பு - உணவுக்கு இனிமை சேர்த்தல் போல் கடமை நட்புக்கு இனிமை சேர்க்கும். எனவே உப்பு இனிமையைக் குறித்தது.

**3. பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை**
**செய்தாங்கு அமையாக் கடை.**

பழகிய நட்பு - ஒருவரோடு பழகியதான நட்பு; எவன் செய்யும் - என்னபயனைத் தரும்; கெழுதகைமை - உரிமை உடைமையால்;

செய்தாங்கு – செய்தவற்றிற்கு ஒப்ப; அமையாக் கடை – உரிமை அமையாத போது.

உரிமை உடைமையால் செய்தவற்றிற்கு ஒப்ப நட்பில் உரிமை அமையாதபோது ஒருவரோடு பழகியதான நட்பு என்ன பயனைத் தரும்.

நட்பிடையே ஒத்த உரிமை வேண்டும்.

ஆங்கு – உவம உருபு

4. விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையான்
கேளாது நட்டார் செயின்.

விழைதகையான் – விருப்பமுறும் தன்மையால்; வேண்டி இருப்பர் – வேண்டுவார்கள்; கெழுதகையான் – உரிமைத் தன்மையால்; கேளாது – தம்மைக் கேளாமலேயே ; நட்டார்செயின் – நட்புடையோர் செய்தால்.

நட்புடையோர் ஒருவர் உரிமைத் தன்மையால் தம்மைக் கேளாமலேயே ஒன்று செய்தால் மற்றவர் விருப்பமுறும் தன்மையால் அச்செயலை வேண்டுவார்.

உரிமையுடன் செய்யும் நன்மை வேண்டப்படும்.

கேளாது – எதிர்மறை வினை எச்சம் ; செயின் – வினை எச்சம்.

5. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்று உணர்க
நோதக்க நட்டார் செயின்.

பேதைமை ஒன்றோ – அறிவின்மையோ; பெருங்கிழமை ஒன்றோ – மிக்க உரிமையோ; என்று உணர்க – என்று உணர்ந்து கொள்க; நோதக்க – துன்பம் தருவனவற்றை; நட்டார் செயின் – நட்புடையோர் செய்தால்.

நட்புடையோர் துன்பம் தருவனவற்றைச் செய்தால் அறிவின்மையோ அல்லது மிக்க உரிமையோ என்று உணர்ந்து கொள்க.

நட்பு துன்பம் தருவன செய்தால் அதனை உரிமை எனக்கொள்ள வேண்டும்.

ஒன்றோ – எண்ணிடைச் சொல்; உணர்க – வியங்கோள்.

6. எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

எல்லைக்கண் - நட்பின் எல்லையில்; நின்றார் - மீறாமல் நின்றவர்; துறவார் - நீங்கமாட்டார்; தொலைவிடத்தும் - அழிவு வந்த போதும்; தொல்லைக் கண் நின்றார் - பழமையான நட்பிலே நின்றவர்; தொடர்பு - நட்பினை.

நட்பின் எல்லையை மீறாமல் நின்றவர் தமக்கு அழிவு வந்தபோதும் பழமையான நட்பிலே நின்றவரின் நட்பினை விட்டு நீங்கமாட்டார்.

நின்றார் - வினையால் அணையும் பெயர்; துறவார் - எதிர்கால வினைமுற்று ; நின்றார் , துறவார் - காலமயக்கம்.

**7. அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்.**

அழிவந்த - தமக்கு அழிவு வரும்படியான செயலை; செய்யினும் - செய்தாலும்; அன்பு அறார் - கொண்ட அன்பில் நீங்கமாட்டார்; அன்பின் வழிவந்த - அன்புடனே வழிவழியாக வந்த; கேண்மையவர் - நட்பினைக் கொண்டவர்.

ஒருவர் தமக்கு அழிவு வரும்படியான செயலைச் செய்தாலும் அன்புடனே வழிவழியாக வந்த பழமையான நட்பினைக் கொண்டவர் தாம் கொண்ட அன்பிலிருந்து நீங்க மாட்டார்.

செய்யினும் - எச்ச உம்மை

**8. கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாள்இழுக்கம் நட்டார் செயின்.**

கேள் இழுக்கம் - நட்புடையவர் செய்த தீங்கினை; கேளாக் கெழுதகைமை - உறவுடைய பிறர் வாயிலாகக் கேளாத உரிமை உடைமை; வல்லார்க்கு - அறிய வல்லவர்க்கு; நாள் - அந்த நாள்; இழுக்கம் - தீங்கினை ; நட்டார் செயின் - நட்புடையவர் செய்தால்.

நட்புடையவர் தீங்கு செய்தால் அதனை உறவுடைய பிறர் வாயிலாகக் கேளாத உரிமை உடைமையை அறியவல்ல நட்புக்கு அந்த நாள் தீங்காகக் கருதப்படும்.

நட்பு தீங்காகாது ; தீங்கு நேர்ந்த அந்த நாளே தீங்காகக் கருதப்படும்.

கேளா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**9. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையும் உலகு.**

கெடாஅ வழிவந்த – நீங்காத பழமை வழியில் வந்த; கேண்மையார் கேண்மை – நட்புடையவர்களின் நட்பினை ; விடாஅர் – விடுதல் செய்யாதவர் ; விழையும் உலகு – இவ்வுலகம் விரும்பி நிற்கும்.

நீங்காத பழமை வழியில் வந்த நட்புடையவர்களின் நட்பினை விடுதல் செய்யாதவரை இவ்வுலகம் விரும்பி நிற்கும்.

பழமையான நட்பினை மறவாமல் மேற்கொள்பவரை எல்லோரும் விரும்பி நட்புக் கொள்வர்.

கெடாஅ, விடாஅர் – இசைநிறை அளபெடை ; உலகு – ஆகுபெயர்.

**10. விழையார் விழையப் படுப பழையார்கண்**
**பண்பின் தலைப்பிரியா தார்.**

விழையார் – விரும்பாதவர் ; விழையப்படுப – விரும்பப்படுவார்கள்; பழையார்கண் – பழமையான நண்பர்களிடத்தே ; பண்பின் – நட்பெனும் பண்பிலிருந்து; தலைப்பிரியாதார் – விட்டு விலகாதவர்.

பழமையான நண்பர்களிடத்தே நட்பெனும் பண்பிலிருந்து விட்டு விலகாதவர்கள் அவர்களை விரும்பாதவர்களால் கூட விரும்பப்படுவார்கள்.

பழமை விருப்பம் தரும் நட்பாகும்.

விழையார் – வினையால் அணையும் பெயர்; விழைய – வினை எச்சம் ; பண்பின் – “இன்” ஐந்தன் உருபு.

*(தொடரும்...)*



## அதிசயமாய் வாழ்ந்த அன்னை

பேராசிரியர் மு.பழனி இராகுலதாசன்

அன்னை சாரதாதேவியின் ஒவ்வொரு அசைவும், நிகழ்வும் அற்புதம்தான், அதிசயம்தான். திருமடத்தில் 'லாட்டு' ஒரு தனிப்பட்ட வித்தியாசமான சீடர். 'லாட்டு'வின் மீது அன்னை சாரதை காட்டிய அன்பு வேறு பிற எந்த நிகழ்வையும்விட அற்புதம், அதி அற்புதம் என்றே வரலாறு காட்டுகிறது.

ஆன்மிக மடத்தில் தலயாத்திரை அதாவது க்ஷேத்ராடனம் முக்கியமான, வரையறுக்கப்பட்ட நிகழ்வு ஆகும். அன்னை சாரதாதேவியின் தலயாத்திரை திட்டமிடப்பட்டு அனைத்து ஏற்பாடுகளும் நிறைவடைந்திருந்தன. அப்படி க்ஷேத்ராடனம் புறப்படும் போது திருமடத்தின் சீடர்கள் அனைவரும் அன்னையிடம் ஆசிபெற்றுக் கொண்டு விடையளிப்பது மரபு. அப்படி, அன்னை சாரதை புறப்படும் வேளை; திருமடத்தின் சீடர்கள் அனைவரும் மரபுப்படி வரிசையாய் வந்து வணக்கம் செலுத்தி விடைகொடுத்து வாழ்த்துப் பெற்றனர்.

'லாட்டு'வை எங்கே, காணோமே? அன்னை சாரதை அங்கும் இங்கும் பார்த்தார்; சீடர்கள் குழுவில் 'லாட்டு' இல்லை.

'லாட்டுவைக் காணோமே, அவன் வரவில்லையா???' – அன்னை கேட்டார். அம்மா க்ஷேத்ராடனம் போவது அவனுக்குத் தெரியாதா? யாரும் சொல்ல வில்லையா?

'ஆசிரமத்தின் கடைசியில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து தியானம் செய்து கொண்டிருக்கிறான்' – என்று சீடர் ஒருவர் மொழிந்தார்.

'அம்மா புறப்படுகிறேன் என்று சொல்லி அவனை அழைத்து வாருங்கள்' என்று அன்னை ஆணையிட்டார்.

க்ஷேத்ராடனம் புறப்படும் நிலையில் எல்லாரும் நின்று கொண்டிருக்க, ஒரு சீடர் வேகமாய் 'லாட்டு' இருக்கும் இடம் நோக்கி ஓடினார். லாட்டு, லாட்டு அம்மா க்ஷேத்ராடனம் புறப்படுகிறார்கள்; நாங்கள் எல்லாரும் ஆசிபெற்று அம்மாவுக்கு விடைகொடுத்து விட்டோம்; நீ மட்டும் இங்கே வந்து என்ன பண்ணுகிறாய்; அம்மா

உன்னைப் பார்த்து ஆசி வழங்கிவிட்டுப் புறப்படத் தயாராய் இருக்கிறார்கள், ம், எழுந்திரு, வா என்று துரிதப்படுத்தினார்.

லாட்டு சொன்னார் :'வரமுடியாது, நான் தபசு பண்ணுகிறேன்'. அழைக்க வந்த சீடர் ஓடினார். 'அம்மா, லாட்டு வரமாட்டேன் என்கிறான், தபசு பண்ணிக்கொண்டிருப்பதாகச் சொல்கிறான்' என்றார்.

அன்னை சாரதை சற்றே முறுவலித்துக் கொண்டார், 'இதோ நான் அவனிடம் போகிறேன்' என்று சொல்லிக் கொண்டு லாட்டு அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்த இடம் நோக்கி மெதுவாக நடந்தார். பக்கத்தில் வந்து நின்று, 'லாட்டு, அம்மா க்ஷேத்ராடனம் புறப்படுகிறேன், எல்லாரும் வந்துவிட்டார்கள், நீ மட்டும் வரவில்லையே, நான் தபசு பண்ணுகிறேன், நான் வரமுடியாது; எனக்கு தபசு முக்கியம் என்று சொன்னாயாமே, சரி நல்லது, உனக்கு அம்மா முக்கியம் இல்லை, நீ இங்கேயே இருந்து தபசு பண்ணு, ஆனால் அம்மாவாகிய எனக்கு என் பிள்ளை முக்கியம், எனக்கு என் மகன் லாட்டு முக்கியம்; அதனால் நானே வந்துவிட்டேன்' என்று அன்னை சாரதை உருகித் தவித்துவிட்டார்.

அடுத்த நிமிடம் என்ன நடந்திருக்கும்? லாட்டு கண் விழித்து அன்னையின் பாதங்களில் பணிந்து கலங்கிவிட்டார். 'லாட்டுவுக்கு நான் தேவைப்படாமல் இருக்கலாம்; ஆனால் எனக்கு என் மகன் லாட்டு வேண்டும்' – என்ற அன்னை சாரதையின் வார்த்தைகள் இந்திய ஆன்மிக வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டு காலங்காலத்துக்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன.

## சைவ நெறித்தளபதி

### பாரதி

### (இல.பழனியப்பன்)

பாரதியே நம்மை உய்விக்க வந்த உன்னதத் தளபதி!

எந்நிலையிலும் சைவநெறி பிறழாத கவி மன்னர்; இளம் வயதிலேயே சைவநெறிக் கொள்கைகள் அவரை ஈர்த்தன.

இது உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை; சைவநெறியின் சன்மார்க்கத் தன்மை மனிதர்களுக்கும் மேலாக அவரைப் பிற உயிரினங்களின் மீது ஈடுபாடு கொள்ள வைத்தது.

காக்கை குருவி எங்கள் சாதி! கடலும் மலையும் எங்கள் கூட்டம் என்று சொல்லியதோடு நில்லாமல் ஏழ்மையிலும் தனக்கும் தன் குடும்பத்திற்கும் கிடைக்கும் உணவை அவைகளுக்குச் சமமாகப் பங்கு வைத்துக் கொடுத்த பாரிவள்ளல்.

சிலர் சூழ்நிலையின் காரணமாக வள்ளல் ஆக்கப்படுகிறார்கள்.

சிலர் பிறப்பிலே வள்ளலாகவே பிறக்கிறார்கள். பாரதி இந்தப் பிரிவுக்குச் சொந்தக்காரர்.

சாதி, மத வேறுபாடுகளைத் தூக்கி எறிந்தவர் அவர். பார்வையில் உண்மையில் எல்லோரும் இந்நாட்டு மன்னர்.

இறுதிவரை இதுவே அவரது சமத்துவக் கொள்கை; அதுவே சைவநெறியின் சாரம்!

கிடைத்த ஒன்றை அப்போதே அனைவருக்கும் பங்கு போட்டுக்கொடுக்கும் மிக உயரிய பொதுவுடமைத் தத்துவம் அவரது வழிமுறை.

வாழ்வின் நிலையாமையைச் சைவ நெறி வலியுறுத்தி இருக்கும் வரை தானும் வாழ்ந்து மற்றவரையும் வாழ வழி காட்டுகிறது.

கொண்டுவந்தது ஒன்றுமில்லை; கொண்டுபோகப் போவதும் ஒன்றுமில்லை; இதை உணர்ந்தால் நம் வாழ்வு என்றும் நல் முல்லை.

அதனால் ஏழ்மையை அவர் வெறுப்பதில்லை; ஏழ்மையே பெருந்தகைமை தரும் என்ற இறைநெறியை முழுமையாக அறிந்தவர்.

ஏழ்மையை இறைமையாகவே பாரதியார் காண்கிறார்.

ஏழ்மையின் காரணமாக அவர் யாருக்கும் அடிமைப்படவில்லை.

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்; இதுதானே நமது உயர் நெறி.

சைவத்திரு முறைகளின் ஆசியோடே வைணவப் பாசுரங்களும்

வளர்ந்தன. நமது திருமுறைகள் அனைத்தும் தெய்வீக ஆற்றல் பெற்றவை. அவற்றையே தன் மூலதனமாக்கிக் கொண்டவர் பாரதி.

திருமுறைகளின் கருத்துகளை எளிமையாகத் தனது பாடல்கள் மூலம் அவர் வழங்கியுள்ளார்.

சுதந்திரப் போராட்டக் காலத்தில் அவர் மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துவதில் மிகப்பெரிய பங்காற்றியிருக்கிறார்.

தேசிய உணர்வைத் தெள்ளு தமிழில் தெம்மாங்கில் தந்த பெருமகனார்.

ரௌத்திரம் பழகு என்று அவர் இயற்றிய புதிய ஆத்தி சூடியை நாம் தவறாகப்புரிந்து கொண்டு தடுமாறுகிறோம்.

இதன் பொருள் மனிதக் கொடுமைகளை அமைதி வழியில் போராடி ஒழிக்க வேண்டும் என்பதேயாகும்.

இது இவருக்கு நமது சைவநெறி தந்த சாத்விக மார்க்கம் தானே!

மனிதகுலம் வளர, வளர உறவு முறைகளில் ஏற்பட்டு வரும் மாற்றம் தரும் விளைவே இந்த ரௌத்திரம். அதனை முள்ளை முள்ளால் எடுப்பது போல் மனித மனங்களில் இருந்து நீக்க வேண்டும் என்ற உறுதியுடன் நம்மை வழி நடத்துகிறார்.

இந்த முதல் அறநெறியே நாம் எப்போதும் தவறாது பின்பற்றவேண்டிய நெறி; நமது சமத்துவ சன்மார்க்க நெறி தானே இதற்குக் காரணம்!

சைவ நெறி பாரதியாரை ஏழ்மை நிலையிலும் வேறு விதமாகச் சிந்திக்க வைத்தது. ஆம் இன்று உலக நாடுகள் பேசுகிற பொதுவுடமை சோசலிசம் முதலாளித்துவம் போன்ற எல்லாவற்றிற்கும் மேலாக வறுமையை ஒழிக்க உலகில் பிறந்த உயிர்கள் பசிப்பிணி போக்கி நிறைவுடன் வாழத் தனது பொது நெறியாக எல்லோரும் எல்லாமும் பெற்று வாழ இறுதி வரை செயல்பட்ட ஒரே ஞானி பாரதியாரே.

வறுமையைக் கொடுத்த பரம் பொருளினையே கேள்வி கேட்டவர்.

பராசக்தி அன்னையைச் சொல்லடி சிவசக்தி என்று உரிமையுடன் விளிக்கிறார். ஆம் தந்தையிடம் மரியாதை செலுத்தும் நாம், நமது ஆதங்கங்களை அன்னையிடம் தானே வெளிப்படுத்துகிறோம்.

இறைவனை நிந்தனை செய்ய உரிமையுடன் நமக்கு வழிதந்தது நமது சைவநெறி மட்டுமே.

வந்தனை செய்கிற நாம் சில நேரங்களில் நமது உரிமையை நிலைநாட்ட நிந்தனையும் செய்கிறோம்.

நமது நெறி காட்டிய ஒன்று பரம் பொருள் தத்துவம்; சற்று விலகிப்போவதைப் பார்த்துக் கொதித்து எழுந்து

ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று கூறி அலையும் அறிவிலிகாள் என்று இறைவனின் ஏகதத்துவத்தை அவ்வப்போது நினைவுபடுத்திக் கொண்டேயிருந்தார்.

வள்ளுவர் காட்டிய வழியாம் வாழக்கைத்துணையாம் செல்லம்மாளைக் குழந்தைபோல நடத்திய பாங்கு ஆண் ஆதிக்கத்தினர் மத்தியிலே மிகப்பெரிய விழிப்புணர்வை ஏற்படுத்தியது.

இவரது குருநாதரான திருவள்ளுவர் சைவ அறநெறியை 1330 குறளிலும் புகுத்த வாழ்க்கைத்துணை வாசுகி அன்னை தானே காரணம்? அதை மறக்கலாமா?

செல்லம்மாள் அமைதி வழி பாரதிக்குப் பணிவிடை செய்து அவரது பணிக்கு முத்தாய்ப்பு வைத்தார். இதுவே அவரது தனிச்சிறப்பு.

ஆனால் வாசுகி எப்படி வள்ளுவரை ஊக்குவித்தார் என்பது நமக்குத் தெரியவில்லை. ஆனால் அவரது ஒத்துழைப்பே திருக்குறள் மகாகாவியம் வடிவாக உருவாயிற்று என்பது மட்டும் எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் உண்மை.

திருக்குறள் பாரதியாரைப் பொறுத்தவரை நீதி நெறிக்காப்பியம் ஆகும்.

எவ்வளவு கால மாற்றம் ஏற்பட்டாலும் குறளின் கருத்துமாற்றம் நிலைத்துள்ளது பாரதியாரை வெகுவாகக் கவர்ந்தது.

என்று தணியும் இந்த சுதந்திர தாகம்?

என்று மடியும் இந்த அடிமையின் மோகம்?

இந்த ஏக்கம் இறைவனிடம் அவர் முறையிட்ட ஏக்கமே.

அக்னி பகவானுக்கு யாகம் செய்யும்போது

தீ வளர்த்திடுவோம் – பெரும்

தீ வளர்த்திடுவோம் என ஒளியின் மூலம் உயர்வடைய, தீய எண்ணங்களைத் தீயாகிய அக்னியில் போட்டு அழித்திடுவோம் என இரு பொருளில் பாடியுள்ளார்.

பாப்பா பாட்டிலும் அறநெறியில் தொடங்கிப் புதிய சாதனை படைத்துள்ளார். ஆணும் பெண்ணும் சமம் என்று அஞ்சாமல் குரல் கொடுத்த சிங்கம்! தமிழர் தங்கம் பாரதியே.

குடும்பச்சுமையைச் சுமக்கும் பெண்ணை அடிமைப்படுத்துவதைக் கடுமையாக எதிர்த்துப் போராடினார்.

அதன்விளைவு பெண்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது.
தொடர் இறை நினைப்பால்,

உயர்ந்த கல்வி நிறைந்த செல்வம் சிறந்த ஞானம் என்ற நமது ஆன்மீக நெறியைக் கடைசிவரை பரப்பிக் கொண்டே இருந்தார். சைவ நெறித் தந்தை சிவ பெருமான் தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி என்று அழைக்கப்படுவதில் இருந்தே அது தென்னாட்டில் உருவாக்கப்பட்டு உலகளாவிய அளவில் உலா வந்து கொண்டிருப்பதை நாம் உணர முடிகிறது.

அந்தத் தலைவன் தந்த இந்த வாழ்வு நெறியை அமைதி வழி பரப்பிய அற்புதத்தலை மகன் பாரதியே.

எத்தனை சோதனைகள் வந்தாலும் அதை எதிர்த்து நின்று சைவநெறி தழைக்க இறுதிவரை பாடுபட்டவர்.

சைவநெறி மகான்கள் அனைவரின் ஆசியும் பெற்றவர் நமது வீரவேங்கை பாரதியார்.

சைவநெறியே எத்தனையோ அரசியல் குழப்பங்களுக்கு இடையே இலங்கையில் இந்தியர்களைக் காத்துக் கொண்டிருக்கிறது.

இலங்கையில் சைவநெறியே இந்த இன்று வரை உலா வந்து கொண்டிருக்கின்றது. குறிப்பாக இலங்கைத் தமிழர்களுக்கும் நமக்கும் தொடர்ந்து வரும் நல்லுறவுப் பாலமே சைவநெறி.

சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம் என்பது பாரதி

பார்வையில் நமக்கும் இலங்கைக்கும் உள்ள நட்புப் பாலமே; அந்தப் பாலமே சைவநெறி.

இந்து மதமே சைவநெறியை அதிகம் எடுத்து வழங்குவதால் இன்றளவும் உயிர்ப்புடன் இருக்கிறது.

நமது திருமுறைகளின் சாரமே பாரதியார் பார்வை.

இந்தியா மதச்சார்பற்ற நாடு. எல்லா மதங்களும் நமக்குச் சம்மதமே.

எந்த மதத்தில் இருந்தாலும் சைவ நெறியைக் குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றுவதே மனித குலம் ஈடேறும் வழி முறையாகும்.

குறிப்பாகச் சொல்வதென்றால் வெளிநாடு வாழ் தமிழர்கள் இந்தியர்கள் தங்களைத் தமிழ்ச் சமயம் என்றே இன்றளவும் அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

சமயம் என்பது மனிதனைப் பண்படுத்தவே. அந்தப் பண்பாட்டை, சைவநெறி உலகில் உள்ள மனிதர்கள் மற்றும் இதர உயிரினங்கள் அனைத்திற்கும் வழங்கியுள்ள மிகப்பெரிய ஆசி ஆகும்.

இன்னும் சொல்லப் போனால் திருமுறைகள் பாசுரங்களில் எங்கேனும் நாம் மதம் என்னும் சமயத்தைக் காட்ட முடியுமா?

சைவம் சமயம் கடந்த உன்னத நெறி.

வையத்தில் எல்லாம், வாழ்வாங்கு வாழ வழி காட்டிய அற்புத நெறி. அதைப் புரிந்து கொண்ட பாரதியார் தன்னம்பிக்கையோடு துணிவாக மக்களை நமது நெறியில் அழைத்துச் சென்றார்.

வள்ளுவர் காட்டிய உள்ளம் உடைமையே இவரது சொத்து! இவர் மனஉறுதி பெற்று நமது நெறி மூலம் நமக்குத் தெம்பு தருகிறார்.

அந்நியர் ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடந்த நமது மக்களை மீட்பதே மிகக் கடினமான செயல்.

நமது அருள்நெறித் தந்தை சிவனாரின் ஆசிபெற்ற இவர் மக்களை விழிப்புணர்வு செய்ய வைத்தது வியப்பில்லையே?

அவன் அருளால் அவன் தாள் வணங்கி என்ற படி ஒப்பற்ற தலைவரின் ஆசி அவருக்கு எப்போதும் கை கொடுத்தது.

மக்களின் அறியாமை, மூடநம்பிக்கை சுய நலம் ஆகியவற்றை ஒழிக்கத் தொடர் போராட்டமே இவரது ஒரே ஆயுதமாக இருந்தது. இந்த அமைதி வழிப் போராட்டம் நமது சைவ நெறி தந்த பரிசு தானே.

இன்று ஆன்மீக மாகிய இறையுணர்வு உலகளாவிய அளவில் கேள்விக்குறியாக வரும் நிலையில் காலத்திற்கேற்ப மறுமலர்ச்சி தேவை என்பதைத் தலைவர் சிவ பெருமான் அன்றே உணர்ந்த காரணத்தால் பாரதியாரைப் போன்றவர்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்.

ஐரோப்பிய நாடுகளிலும் சைவநெறி என்றே பயன்படுத்திச் செயல்படுகிறார்கள்.

தொடக்க காலத்தில் சிவமதம் என்றே சொல்லிவந்தனர்; ஏன் எழுதியும் வந்தனர். அதன் தொடர்ச்சியே சிவமயம் என்று, இன்று நாம் பயன்படுத்துவதாகும்.

சைவநெறி என்று இருந்தாலும் தமிழர்கள் சிவவழிபாடு, வைணவ வழிபாடு முருகன் வழிபாடு, முன்னோர் வழிபாடு ஆகிய வழிபாடுகளே சமய உணர்வாகப் பார்க்கப்பட்டது.

தமிழைத் தந்த சிவபெருமானுக்கு வள்ளுவர், வள்ளலார் வழியில் பாரதியாரும் மனம் கனிந்து நன்றி கூறி வணங்குகிறார்.

தமிழ் நாட்டில் இருப்பவை எல்லாம் சைவ வைணவ மடங்களே! ஆனால் அவை இன்று இந்து மடங்களாகிவிட்டன. இந்து மதத்தின் ஒரு பகுதியாக எந்தக் காலத்திலும் தமிழ் மதம் இருந்தது இல்லை; காலத்தின் கட்டாயம் இப்படி ஆகிவிட்டது.

சைவ நெறியின் கோட்பாடுகளை இந்து சமயம் இன்றளவும் முழுமையாக ஏற்றுக்கொள்ளத் தயங்குவது உண்மையே.

சைவ நெறி அந்தந்த மொழியை முன்னிலைப்படுத்துகிறது. இந்தக் கருத்து பாரதிக்கு மிகவும் உடன்பாடான ஒன்று. ஆனால் நடைமுறையில் இன்று அது எல்லோராலும் பின்பற்றப்படவில்லை. இதையெல்லாம் கண்ட பாரதியார் சிவபெருமானைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு வள்ளலார் போல அவரிடமே முறையிடுகிறார்.

பாரதி தளபதியாக இருந்து ஒவ்வொரு காலகட்டத்திலும் சைவ நெறியை வளர்த்தார். அதன் பின்னர் இன்று சைவ நெறி பற்றிய சிந்தனை மீண்டும் அதிகரித்து வருவதற்கான காரணம் இசுலாம், கிருத்துவம் போலச் சைவத்தை உள்ளடக்கிய இந்து மதம் நிறுவனமாக்கப்படவில்லை. இந்து சமயத்தைச் சேர்ந்தவர்கள் அதிகம் நம்நாட்டில் இருந்தாலும் சைவநெறி அடிப்படையில் சமயச் சார்பற்ற அரசாக (Secular State) உலகில் ஒரு தனித்தன்மையுடன் திகழ்வது சிறப்பான தனிவழிமுறை ஆகும்.

மத வெறியில் தடுமாறுபவர்களுக்கு இது நல்லதோர் வழிமுறையாகும்.

சைவத்தைப் பொறுத்தவரை, அறநெறிகள் காப்பாற்றப்படுவதே முக்கியம். தன் முனைப்பு இல்லாமல் மனிதகுலம் உய்ய வழி காட்டும் சைவநெறியைப்பாதுகாத்துத் தந்துள்ள பாரதியின் வழியில் நாம் பயணத்தைத் தொடர்வோம்.

பாரகத்தில் ஒற்றுமை நிலவ உலகம் உய்ய என்றும் வழிகாட்டிச் சூளுரைப்போம்.

---

## மடாலய நிகழ்வுகள்

14.11.2022 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரிக்குச் செல்லும் சாலையையும் காரைக்குடி மதுரை சாலையையும் இணைக்கும் பாலம் திறப்பு விழா நடைபெற்றது.

அன்றைய நாளில் குழந்தைகள் தினவிழா மிகச் சிறப்பாக மடாலய வளாகத்தில் நடைபெற்றது.



### விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)
- M.A. Tamil

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**